# மதுரை வைதிக ஸமாஜம்

## வெள்ளி விழா மலர்

**1934 — 1959**







சமாஜத்தின் முதல் தலைவர் :
பிரம்மஸ்ரீ ஈஸ்வர தீக்ஷிதர்

காரியதரிசி :
பிரம்மஸ்ரீ A. வெங்கடசுப்பிரமணிய
சிரௌதிகள்

தற்போதைய தலைவர் :
பிரம்மஸ்ரீ T. C. யக்ஞசாமி தீக்ஷிதர்

காரியதரிசி :
கொட்டாரம் பிரம்மஸ்ரீ
K. P. சுப்ரமணிய சாஸ்திரி

## திருமத ஆசார்யாள் சைவ, மத்வ, வைஷ்ணவ ஸன்னிதானங்களுக்கும் எழுதிய விண்ணப்பம்.

1. ஸ்ரீ ஸ்ரீ மஹாஸன்னிதானம் அவர்கள் சமூகத்துக்கு எழுதிக்கொண்டது. அடுத்த மாதம் எங்கள் ஸமாஜத்தின் 25-வது ஆண்டு வெள்ளிவிழா வருகிறது. அதற்கு ஓர் ஆண்டுமலர் வெளியிட ஏற்பாடு செய்திருக்கிறோம். மஹாசன்னிதானம் அவர்கள் எங்கள் ஸமாஜத்தின் முன்னேற்றத்திற்கும் ஆஸ்தீகம் பரவவும் நாங்கள் செய்துவரும் பணிகள் அபிவிருத்தியடையவும் ஆசீர்வாதம் செய்தும், எல்லா ஆஸ்தீகர்களும் எங்களுக்கு வேண்டிய உதவிகள் செய்யும்படியும் ஓர் ஸ்ரீமுகம் அனுப்பி வைக்கும்படியும் தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறோம்.

2. ஷ வைபவத்தில் உலக க்ஷேமார்த்தமாக அதிருத்ரம் அல்லது மஹாருத்ரமும், ஆஸ்திகர்கள் நன்மையை உத்தேசித்து திரியம்பகம், மிருத்யோஸ்துல்யம், துஸ்வப்ன, நாமத்ரயம், இந்த மந்திரங்களை பல லக்ஷ ஆவர்த்தி செய்து, ஷ ரக்ஷையை ஆஸ்திகர்களுக்குக் கொடுக்கவும், மற்றும் மஹான்களின் உபன்யாஸங்களும் நடத்த உத்தேசித்திருக்கிறோம். இதற்கும் தங்கள் ஆசீர்வாதம் வேண்டுவதுடன் ஆஸ்திகர்கள் எங்களுக்கு வேண்டிய உதவிகள் செய்யவும் ஆக்ஞாபிக்கும்படியும் கேட்டுக்கொள்கிறோம்.

3. ஆஸ்திகர்களின் பொக்கிஷமும் கர்மானுஷ்டானங்களுக்கு வழிகாட்டவும் அரும்பாடுபட்டு சேகரித்து வைத்துப்போன ஸ்ரீ வைத்யநாத தீக்ஷிதர் அவர்களின ஜயந்தியை நல்ல முறையில் கொண்டாடவும் நினைக்கிறோம். இன்றுள்ள நிலமையில் நாம் அவர்களின் ஜயந்தியைக் கொண்டாடுவது மிகவும் முக்கியம் என்பது எங்கள் நினைப்பு ஆகையால் தாங்கள் தயவு செய்து இதுகண்டதும் அங்குள்ள அறிஞர்கள் வித்வான்கள் இவர்களையும் கலந்து தீக்ஷிதர் அவர்கள்

# மதுரை வைதீக ஸமாஜம்

## வெள்ளி விழா மலர்

**1934 — 1959**



விகாரிஸு மார்கழி 5ல 20-12-1959.

ஸ்ரீ ராமகிருஷ்ண பிரஸ்.
மதுரை.

ओम्.

॥ श्री शृङ्गेरी श्रीजगद्गुरुसंस्थानम् ॥

श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यवर्य पदवाक्यप्रमाणपारावारपारीण यमनियमासनप्राणायामप्रत्याहारध्यानधारणासमाध्यष्टाङ्गयोगानुष्ठाननिष्ठ तपश्चक्रवर्त्यनाद्यविच्छिन्न श्रीशंकराचार्य गुरुपरम्पराप्राप्तषड्दर्शनस्थापनाचार्य व्याख्यानसिंहासनाधीश्वर सकलनिगमागमसारहृदय सांख्यत्रयप्रतिपादक वैदिकमार्गप्रवर्तक सर्वतन्त्रस्वतन्त्राधिराजधानीविद्यानगरमहाराजधानीकर्णाटकसिंहासनप्रतिष्ठापनाचार्य श्रीमद्राजाधिराजगुरुभूमंडलाचार्य ऋष्यश्रृङ्गपुरवराधीश्वर तुङ्गभद्रातीरवासि श्रीमद्विद्याशंकरपादपद्माराधक श्रीजगद्गुरु श्रीचन्द्रशेखरभारतीस्वामिगुरुकरकमलसञ्जात

# श्रीजगद्गुरु

## शृंगेरी श्रीमदभिनवाविद्यातीर्थस्वामिभिः ॥

अस्मत्प्रीतिभाजन - श्रीमथुरा - वैदिकसमाज - विषये नारायणस्मरणपूर्वकं विरचिता आशिषः समुल्लसन्तुतराम ।

भवत्प्रेषितं विज्ञप्तिपत्रं समासदत्। मथुरावैदिकसमाजः वत्सराणां पंचविंशतिं अतिवाह्य षड्विंशवत्सरे पदमादधाति । तमिमं सन्तोषावसरं रजतोत्सवप्रवर्तनेन सफलयितुं त्र्यंबकजपं नामत्रयमहामन्त्रजपं महारुद्रजप-होमादिकं च अनुतिष्ठासन्ति सामाजिकाः। वेदशास्त्रपारंगतान् पण्डितान् पुरस्कृत्य धर्मप्रवचनानि प्रवर्तयिष्यन्तीति च विदित्वा नितरां तुष्यामो वयम् ॥

सहकरोतु समाजमिमं महाजनः। रजतमहोत्सवो निष्प्रत्यूहं प्रवर्तताम्,। महाजनाः सर्वे सुखमेधन्तामिति च आशास्महे ॥

कडलूर,
२७—११—५६.

श्री

# சிருங்கேரி ஸ்ரீ மஹாஸ்வாமிகளின் உபதேசம்.

ஜனனமும் மரணமும் ஒன்றோடொன்று விடாத தொடர்புள்ளன. பிறப்பு இருந்தால் இறப்பு உண்டு என்பது நிச்சயம். இறந்துபோனவன் அழிந்தேபோய் விடுவதில்லை. தான் செய்த பாப புண்ணிய மூட்டை யுடன மறுபடியும் பிறக்கிறான். ஆகையால் பிறந்த ஒருவன் தான் சிரஞ்ஜீவியாக இருப்போம் என்று நினைப்பதும், பாபம் செய்தவன் இறந்த பிறகு அதற் குப் பலனில்லை என்று நினைப்பதும் அறிவீனமே யாகும். ஆத்மா நித்யமானது என்ற கொள்கையைப் பின்பற்றும் நாம் பாபம் செய்யாமலும் புண்ணிய வழி யில் ஈடுபட்டும் இருக்கவேண்டும். ஆனால் ஜனங்கள் புண்ணிய கர்மாக்களில் நாட்டம் கொள்ளுவதில்லை. புண்ணிய பலமாகிய ஸுகத்தை மாத்திரம் விரும்பு கிறார்கள். பாப பலமாகிய துக்கத்தை விரும்புவ தில்லை. ஆனால் முழுமூச்சுடன் பாப காரியங்களைச் செய்கிறார்கள். வியாபாரம் செய்ய ஆரம்பிக்கும் போதே கள்ள வியாபாரம் செய்யவேண்டும் என்ற எண்ணம் வியாபாரியின் மனத்தில் இடம் பெறுகிறது கள்ள வியாபாரம் செய்பவரை அணுகி 'இது பாபச் செயல். எவ்வளவோ ஜனங்களுக்கு இதனால் தீங்கு ஏற்படுகிறது. இதைச் செய்யாதீர்கள்' என்று சொன் னால் அதற்கு அவர் 'நான் மாத்திரம் கள்ளமார்க் கெட்டை நிறுத்தினால் போதுமா? கள்ள வியாபாரிகள் எல்லோரும் திருந்தினால்தான் ஜனங்களுக்கு நன்மை ஏற்படும்' என்று ஸாவதானமாகப் பதில் சொல்லி விட்டுத் தன் பாபச் செயலைத் தீவிரமாகச் செய்கிறார். தனி மனிதன் திருந்தினால்தான் ஸமூஹம் திருந்தமுடி யும். ஒன்றொன்றாகத்தான் நூறு. வேதம் ஒவ்வொரு மனிதனையும் 'நீ திருந்து, நீ திருந்து' என்றுதான் உப

தேசம் செய்கிறது. தான் திருந்திய பிறகுதான் பிறரைத் திருத்தும் பணியில் ஈடுபடவேண்டும். பிறரைத் திருத்துவதில் நாம் கவலை கொள்ளவேண்டாம் ஒவ்வொருவரும் தான் திருந்தி பாபம் செய்யாமல் இருந்தால் ஸமூஹம் தானாகத் திருந்திவிடும். ஸமூஹத்தைப்பற்றிக் கவலையே இல்லை.

பாபம் எது ? புண்ணியம் எது ? என்று பிரித்துக் கூறி அதனதன் பலன்களை விவரிக்கிறது வேதம். அதில் நம்பிக்கை இல்லாததால் பாபம் செய்கிறார்கள் சிலர். மனிதனுடைய பிரயத்தினத்தால் மாத்திரம் ஸுகத்தை அடையமுடியாதென்பது உலக அனுபவம் உள்ளவர்கள் கண்டுகொண்டிருக்கும் உண்மை எவ்வளவோ முயற்சி செய்கிறான். பலன் கிட்டுவதில்லை. ஒவ்வொரு ஸமயம் தானாக ஸுகம் கிட்டுகிறது. துக்கமும் இதுபோல்தான். நமது கண்களுக்குப் புலப்படாத தீய சக்தியும், நல்ல சக்தியும் இருந்து நமது காரியங்களில் குறுக்கிடுவதைக் காண்கிறோம். அதையே பாபம் என்றும் புண்ணியம் என்றும் வேதம் கூறுகிறது. எலக்ட்ரிக் கம்பியைத் தொட்டால் ஷாக் அடிக்கிறது குறைந்த வோல்டேஜ் உள்ள கரண்டாக இருந்தால் மனிதன் தாக்குப்பிடிக்கிறான். ஷாக் அடிக்கப்பட்ட மனிதன் புத்திசாலியாக இருந்தால் மறுபடி ஷாக் அடிக்கும் ஸந்தர்ப்பத்தை ஏற்படுத்திக்கொள்ளக்கூடாது. ஒரு தடவை ஷாக் அனுபவம் உள்ளவன் மிக அதிக வோல்டேஜ் உள்ள மின்சாரத்தைத் தொட முற்பட்டால் அவனை முட்டாள் என்று சொல்லாமல் வேறென்ன சொல்லுவது? அதுபோலவே பாபத்தின் பலனாகிய துக்கத்தை அனுபவிக்கும் நாம் பாபம் செய்யும் ஸந்தர்ப்பத்தைத் தவிர்க்கவேண்டும். ஆனால் அன்றாட வாழ்க்கையில் நம்மையறியாமல் சிறு பாபங்கள் செய்யுமாறு நேர்ந்துவிடலாம். அதையும் தவிர்க்க முயலவேண்டும். மஹாபாதகம் போன்ற பயங்கர

மான பாபங்களை அதிகவோல்டேஜ் உள்ள கரண்டைப் போல் பயத்துடன் அணுகாமல் தூர விலகிவிட வேண்டும்.

சாஸ்திரங்களில் நம்பிக்கையில்லாத ஆராய்ச்சி யாளருக்குச் சொல்லுகிறேன். அவர்கள் நன்றாக ஆராய்ச்சி செய்யட்டும். ஆனால் முதலில் சில கொள் கைகளை நம்பித்தான் அவர்கள் ஆராய்ச்சி செய்ய வேண்டும் எந்த விஞ்ஞான ஆராய்ச்சியிலும்கூட இந்த நியமம் உண்டு என்பதை அவர்கள் மறந்துவிடக் கூடாது. வீடு கட்டலாம். அடித்தளம் இல்லாமல் கட்டமுடியாது. எவ்வளவு புத்திசாலியாக இருந்தா லும் ஆகாயத்தில் கல் அடுக்கி வீடு கட்டுவது ஸாத்திய மல்ல அடித்தளம் நன்றாக கெட்டியாக இருக்கவேண் டும். வேதம் கூறும் கொள்கைகள் தோஷமற்றவை. அவைகளை நம்பலாம் என்று முன்பு நன்கு ஆராய்ச்சி செய்த நமது முன்னோர்களான ரிஷிகள் தீர்மானம் செய்து நமக்குச் சொல்லியிருக்கிறார்கள். அதை நம் பினால் நாம் நிச்சயமாக நன்மையடையலாம்.

தந்திரமாகப் பதில் சொல்லிவிட்டுப் பாபம் செய் பவர்கள் சிலர். 'பாபச்செயல்கள் என்னவென்பதும் தெரியும். அதன் பலன்களில் நம்பிக்கையும் இருக் கிறது. ஆனால் அந்தர்யாமியான பகவானுடைய நிர்பந்தமான பிரேரணையால் பாபம் செய்துவிடு கிறேன்' என்று அவர்கள் கூறுவார்கள். அவர்கள் கூற்றில் கொஞ்சம் உண்மையும் இருக்கிறது. பகவா னுடைய பிரேரணையால்தான் நமது இந்திரியங்கள் இயங்குகின்றன. ஆனால் அவர் இந்திரியங்களை இயக்கி வைப்பது ஓர் இஞ்சினியர் மேட்டூர் அணைக்கட்டிலிருந்து காவிரியில் ஜலம் விடுவதுபோல்தான். விவசாயி அந்த ஜலத்தை வேண்டிய வயல்களில் பாய்ச்சிக்கொள்ள வேண்டும். வேண்டாத இடங்களில் போகாதவாறு

தடுக்கவேண்டும். விவசாயி தன் கடமையைச் செய்யாதுபோனால் அவனால் அறுவடை செய்து பலனடைய முடியாது "தன் வயல் முழுகிவிட்டது; அதற்குக் காரணம் மேட்டூர் இஞ்சினீயர்தான்" என்று அவன் கூறினால் அதை ஒப்புக்கொள்ள முடியுமா? அதுபோல் இந்திரியங்களை நல்ல வழியில் நடத்தவும், தீய வழியினின்று தடுக்கவும் மனிதனுக்கு ஸ்வாதந்திரியம் இருக்கிறது. இந்தக் கட்டுப்படுத்தும் சக்தியால்தான் மனிதன் மாடுகளைக்காட்டிலும் உயர்ந்தவனாகிறான். இந்த சக்தி முதலில் இல்லைபோல் தோன்றினாலும் அப்பியாசத்தால் மனிதன் இந்திரியங்களை அடக்கியாள முடியும். பாபவழியில் இந்திரியங்கள் செல்லும்போது அவைகளைத் தடுக்கத் தனக்கு உரிமையில்லை, சக்தி இல்லை என்று சொல்லி பகவானிடம் பழியைச் சுமத்துபவர்கள் பாப பலனாகிய துக்கம் அணுகும்போது அதைத் தடுக்க ஏன் முயற்சி செய்கிறார்கள்? அதற்கு மாத்திரம் உரிமை அவர்களுக்கு ஏது? ஆகையால் பாபச்செயல்களை செய்யாமல் இருக்க நாம்தான் முயற்சி செய்யவேண்டும்.

புண்ய காரியங்களைச் செய்யவேண்டும். புண்யம் செய்தவர்கள் தான் செய்தவற்றைக்கூறிப் புகழ்ந்து கொள்ளுவது கூடாது. செய்த தர்மத்தைச் சொல்லுவதால் அது அழிந்துவிடுகிறது. இவ்விதம் சொல்லுவதில் ஒரு யுக்தியும் இருக்கிறது. தான் செய்த தர்மத்தைப் பிறரிடம் கூறும்போது அவர்கள் கொடுக்கும் பணத்தாலோ, செய்யும் மகிழ்ச்சியாலோ ஸுகத்தை அடைகிறான். தர்மத்தின் முடிவான பலனாகிய ஸுகத்தை அவர்கள் இவ்விதம் அடைந்துவிடுவதால் செய்த தர்மத்திற்கு வேறு பலன் இல்லாமல் போய்விடுகிறது. மேலும் தர்மத்தை சிரத்தையுடன் செய்யவேண்டும். தக்ஷன் சிரத்தையில்லாமல் செய்த யாகம் அவனுடைய நாசத்திற்கே காரணமாக ஆகிவிட்டது.

ஆகையால் நாம் பாப காரியங்களைச் செய்யாமல், புண்ணிய கர்மாக்களை ஒழுங்காகச் செய்தால் நமது மனம் சுத்தியடைந்து நாம் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியின் அனுக்ரஹத்திற்குப் பாத்திரமாவோம்.

---

# நமது தர்மம்.

நமது மதம் வேதத்தை அடிப்படையாகக் கொண்டது. ஆகவே நாம் எல்லோரும் வைதீகர்கள் என்று சொல்லிக்கொள்வது தப்பு அல்ல. ஆனால் வேதங்களிலோ சாஸ்திரங்களிலோ கூறப்படும் உண்மைகளை அறிந்திருக்கிறோமா, அவைகளின்படி நடக்கிறோமா என்றால், சில பெரியோர்களைத்தவிர, நம்போல்வார், இல்லை என்று தான் சொல்லும்படி வரும். அவ்விஷயத்தில் நாம் லௌகீகர்கள் தான். நம் மதத்தின் பெருமையாலும், நம் பூர்வீகர்களான மஹரிஷிகளின் தபோவன்மையாலும், பாரத நாட்டில் வைதீக தர்மங்கள் ஒரு சிலராலாவது அறியப்பட்டும் அனுஷ்டிக்கப்பட்டும் இருக்கின்றன. இச்சிலரை நாம் நன்கு ஆதரித்தோமானால் நாம் நம் நாட்டுக்கு மிகப்பெரிய தொண்டு ஆற்றினவர்களாக ஆவோம். இப்பணி செய்யுமாறு நமது புத்தியை ஊக்குவிக்கும்படி ஸ்ரீ மீனாக்ஷி அம்மையையும் அவளின் உடப்பிறப்பான ஸ்ரீ அழகர் பெருமானையும் பிரார்த்திப்போமாக.

தி. தோதாத்திரி அய்யங்கார்,
பிரின்ஸிபால், மதுரை காலேஜ்.

உ

SRI KANCHI KAMAKOTI PITHADHIPATHI
JAGADGURU

# Sri Sankaracharya Swamigal Mutt

**KANCHEEPURAM.**

முகாம்: நாம்பல்.

*Enc.* *Date*: 17—11—1959.

மதுரை வைதிக ஸமாஜம் தலைவர் பிரும்மஸ்ரீ T. C. எக்ஞசாமி தீக்ஷிதர் அவர்களுக்கு.

அவ்விடமிருந்து தாங்களும் ஸமாஜ அங்கத்தினர்களும் சென்ற 22—10—59, 9—11—59உ களில் எழுதிக் கொண்ட பத்திரிகைகள் கிடைத்து ஸ்ரீ மஹாஸன்னிதானத்தில் விக்ஞாபனம் செய்துகொள்ளப்பட்டது.

தங்கள் ஸமாஜத்தின் வெள்ளிவிழா 1959ஸு டிஸம்பர்மீ 17உ முதல் மூன்று நாட்களுக்கு கொண்டாட ஏற்பாடு செய்யப்பட்டிருப்பதைக் கேட்டு ஸ்ரீ மஹாஸன்னிதானத்தில் ஸந்தோஷமடைகிறார்கள்.

அது ஸமயம் நடைபெறும் ஸ்ரீ மஹாருத்ர ஹோமம் முதலான ஸத்காரியங்களில் ஆஸ்திக மஹாஜனங்கள் யாவரும் ஈடுபட்டு இந்த வைபவத்தை ஈச்வரப்ரீதியாய் நடத்தி பூர்த்தி செய்யுமாறு தெரிவிக்கும்படி ஸ்ரீ மஹாஸன்னிதானத்தில் ஆக்ஞையான பிரகாரம் தெரிவிக்கலான காரியம்.

இத்துடன் அனுப்பியிருக்கும் "நமது மதத்தின் அடிப்படைக் கொள்கைகள்" என்னும் விஷயத்தை மலரில் பிரசுரம் செய்யலாமென்பதாய் ஸ்ரீ மஹாஸன்னிதானத்தில் ஆக்ஞையான விபரம் தெரிவிக்கலான காரியம்.

அநேக நமஸ்காரம்

**S. Ramachandran,**

மானேஜர்.



ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி

ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள்.

உ
குருப்யோ நம:

# நமது மதத்தின் அடிப்படைக் கொள்கைகள்.

***ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகளது உபதேசம்.***

நமது வேதமானது,

(1) "ஸத்யத்தைச் சொல், (ஸத்யம் வத)
(2) தர்மத்தை நடத்து, (தர்மம்சர)
(3) அன்னையைத் தெய்வமெனக்கொள், (மாத்ருதேவோ பவ)
(4) பிதாவைத் தெய்வமெனக்கொள், (பித்ருதேவோ பவ)
(5) குருவைத் தெய்வமெனக்கொள்" (ஆசார்யதேவோ பவ)

என்று உபநிஷத் வாக்யம் உபதேசித்திருக்கிறது.

ஸத்யம் என்பது பிராணிகளுக்கு க்ஷேமத்தைக் கொடுக்கக்கூடிய உண்மை. தர்மம் என்பது தன்னுடைய வம்சத்தில் ஸதாசாரமுள்ள ஸாதுக்களான முன்னோர்கள் எதைத் தர்மமென நினைத்து நடந்து வந்தார்களோ அதுவே ஒருவனது தர்மம். நம் ஒவ்வொருவருக்கும் தாய், தகப்பன், குரு இவ்விதம் தனித்தனி ஏற்பட்டிருப்பவர்களை நாம் தெய்வமாக நினைத்து— இவர்களை மனத்தை விட்டு அகலாமல் நினைவில் வைத்துக்கொண்டு அவர்கள் சொற்படி நடந்துவரவேண்டும்.

மேற்கண்ட கொள்கைகளை நாம் கடைப்பிடித்து அருளையும் பொருளையும் பெற்று அஹிம்ஸை, ஸத்யம், (அஸ்தேயம்) திருடாமலிருப்பது, சரீரசுத்தி, இந்திரியங்களை அடக்குதல், தெய்வபக்தி - இவைகளில் எல்லோருக்கும் வழிகாட்டிகளாக இருக்கவேண்டும்.

அஹிம்ஸா - ஸத்யம் - அஸ்தேயம்
சௌசம் - இந்த்ரிய நிக்ரஹ: !
ஏதான் - தர்மான் - ஸமாஸேன
சாதுர் வர்ண்யம் - அப்ரவீத் மனு: ||

(1) அஹிம்ஸை :— அஹிம்ஸை என்பது எறும்பு போன்ற அற்ப பிராணிகள் முதல் யாருக்கும் எவ்வித மான கஷ்டத்தையும் உண்டுபண்ணுமல் இருப்பது தான். ஒருவன் மற்ருெருவனை கஷ்டப்படுத்த நினைக்கக்கூடாது. வாயாலும் ஒருவனுக்குக் கஷ்டத்தைத் தரும் பேச்சை பேசக்கூடாது. அப்படியே சரீரத் தாலும் யாருக்கும் ஹிம்ஸை செய்யக் கூடாது. ஸ்வபாவத்தில் ஒருவனுக்கும் பரஹிம்ஸை பண்ணத் தோன்ருது. ஆனுல் பிறர் ஏதாவது குற்றம் செய்தால் கோபத்தினுல் ஹிம்ஸை செய்யத் தோன்றும். நம் முடைய குழந்தை கூரையில் நெருப்பு வைத்துவிட்டால் அப்பொழுது உடனே நெருப்பை அணைப்போம். நாளை முதல் அப்படி நேராமல் பார்த்துக்கொள்ளுவோம். நமக்குத் துன்பம் பண்ணுகிறவனையும் குழந்தை போல பாவிக்க வேண்டும். அதுதான் அஹிம்ஸை. அந்த அஹிம்ஸையால் சித்த வ்ருத்தி அடங்குவது முக்கியப் பிரயோஜனம். அதைத் தவிர அவனுக்கு எதிரில் கொலை பண்ணவேண்டும் என்று வரும் கோபம் உடையவர்கள் கூடச் சாந்தம் அடைவார்கள். அவன் இருக்குமிடத்தில் குரூரமானவர்களுக்கும் மனதில் சாந்தம் உண்டாகும். அவரவர் ஸ்வதர்ம விஷயத்தைத் தவிர மற்றவற்றில் அஹிம்ஸையை அனுஷ்டிக்க வேண்டும்.

(2) ஸத்யம் : – மனதும் வாக்கும் ஒரே விஷயத்தைச் செய்வதுதான் ஸத்யம் மனதிலுள்ளதைச் சொல்லத்தான் பகவான் நமக்கு வாக்கைக் கொடுத்திருக்கிருர். மனதிலுள்ளது வாக்கில் வரவேண்டுமென்பது ஸத்தியத்தின் பொது லக்ஷணம் ஸத்தியம் நல்லதை

உண்டாக்க வேண்டும்; கெடுதல் ஏற்பட்டால் அது ஸத்தியமாகாது. ஸத்தியமானது எல்லா ஜீவன்களுக்கும் க்ஷேமத்தைக் கொடுப்பதாக இருக்கவேண்டும். காமத்திலும் க்ரோதத்திலும் ஒருவருடைய குற்றத்தை எடுத்துச் சொல்லி தூஷித்து அவனுடைய பெருமையைக் குறைக்கவேண்டும் என்ற ஆசையோடு சொல்லப்படும் வார்த்தைகள் உண்மையானவைகளாக இருந்தாலும் ஸத்தியமல்ல. ஸத்தியத்தால் ஒருவனுக்குத் தாபம் உண்டாகக் கூடாது. கஷ்டம் உண்டாகக் கூடாது. ஸத்திய வார்த்தைகளையும் சொல்லும்போது சாந்தமாகச் சொல்ல வேண்டும். அவை ஹிதமாகவும் இருக்கவேண்டும். இவை வாக்கினால் சொல்லப்படும் ஸத்தியம்.

மனத்திலும் ஸத்தியத்தை அனுஷ்டிக்க வேண்டும். பொய் சொல்ல நினைக்கக் கூடாது. திரிகரணங்களாலும் ஸத்தியமாக இருக்கவேண்டும். ஸத்தியத்தையே சொல்லிச் சொல்லி பழக்கம் பண்ணிவிட்டால் மனது ஸத்தியத்தையே நினைக்கும். வாக்கு ஸத்தியத்தையே சொல்லும். கனவில்கூட ஸத்தியத்தைக் கைவிடாத ஸ்திரபாவம் வேண்டும். அப்பொழுது ஸத்திய ஸித்தி உண்டாகும். நாம் சொல்லுவதெல்லாம் அப்படியே நடக்கும்.

(3) **அஸ்தேயம்:—** அநியாய ஆசை நமக்கு இருக்கக்கூடாது. மற்றவன் சொத்தை ஏமாற்றிப் பறிக்கக் கூடாது. அடித்துப் பிடுங்கக் கூடாது.

(4) **சௌசம்:—** சரீரசுத்தி மனசுத்தியை உண்டாக்கும். சுத்தம் எல்லாவிதமான கர்மங்களுக்கும் முதலில் அவசியம். இன்னின்ன காலங்களில் இன்னின்ன பதார்த்தங்களைக் கொண்டு சரீரத்தையும் பாத்திரங்களையும் சுத்தம் செய்யவேண்டும் என்கிற விஷயங்களைத் தெரிந்துகொண்டு அனுஷ்டானம்

செய்யவேண்டும். சுத்தம் எல்லாவிதமான காரியங்களுக்கும் முதலில் அவசியம். தங்கள் தங்களுக்கு ஏற்பட்ட காரியங்களை (ஸ்வதர்மங்களை) செய்வதில் சுத்தமாக இருக்கவேண்டும்.

(5) **இந்த்ரிய நிக்ரஹம்:—** நம்முடைய இந்திரியங்களை அவைகளின் போக்கிலே விட்டுவிடக் கூடாது. ஒவ்வொரு இந்திரியங்களையும் அவைகளுக்கு ஏற்பட்ட காரியங்களில் அவசியமான அளவில் உபயோகப் படுத்தவேண்டும். அவைகள் போகும் போக்கெல்லாம் விடாமல் அடக்கி மனத்தைத் தீய வழிகளில் செல்லவொட்டாமல் வசப்படுத்தப் பிரயத்தனம் செய்ய வேண்டும். பதஞ்சலி யோக சூத்திரத்தில் அபரிக்ரஹம் என்று ஒரு குணத்தையும் இன்றியமையாத யோக ஸாதனமாகச் சொல்லியிருக்கிறார்.

(6) **அபரிக்ரஹம்:—** இந்திரியங்கள் போன வழி விடாமல் அவற்றை அடக்கி நமக்கு எவ்வளவு அவசியமோ அவ்வளவு மட்டும் செலவு செய்துகொண்டு மிச்சத்தை மற்றவர்களுக்காக உபயோகிக்கவேண்டும். உதாரணமாக, நமக்கு உடை வேண்டுமானல் இரண்டு ரூபாயில் கிடைக்கும்போது ஆடம்பரத்திற்காகப் பத்து ரூபாய்க்கு உடை வாங்காமல் இரண்டு ரூபாய் ஆடையை வாங்கி உபயோகப்படுத்திக்கொண்டு பாக்கித்தொகையை மற்றவர்களுக்கு உபயோகப்படும்படி செய்யவேண்டும். நாம் அதிக விலையுள்ள அன்ன பானங்களை உபயோகிப்பதால் அதிகச் செலவு ஆகிறது. ஸ்வல்பச் செலவில் நமக்குப் போதுமான ஆகாரங்களைச் சாப்பிட்டுக்கொண்டு மீதி பணத்தை மற்றவர்களுக்கு உபயோகப்படும்படி செய்யவேண்டும். பொதுவாக அனவசியமான ஆடம்பரச் செலவுகள் செய்யாமல் அவசியமான செலவுகளைச் சிக்கனமாக செய்துகொண்டு பாக்கியை மற்றவர்களுக்கு உபயோகப்படுத்துவது தான் அபரிக்ரஹம்.

(7) தெய்வபக்தி:— கடவுள் ஒருவரே. குளிரும் காற்றும் மின்சாரமும் கண்களுக்குப் புலப்படாவிட்டாலும் இருக்கின்றனவன்றோ! புஷ்பத்தின் வாசனை கண்களுக்குப் புலப்படாவிட்டாலும் இருக்கின்றதல்லவா? கற்கண்டில் இருக்கும் தித்திப்பும் படிகாரத்திலிருக்கும் கசப்பும் கண்களுக்குப் புலப்படாவிட்டாலும் இருக்கின்றனவன்றோ! சங்கீத ராகம் கண்ணுக்குப் புலப்படாது; செவிக்குப் புலப்படும். பச்சை, சிகப்பு முதலிய வர்ணங்கள் காதிற்குப் புலப்படாது கண்ணிற்குப் புலப்படும். சூடு, குளிர் இவை செவிக்குப் புலப்படாது; தொடுதலுக்கும் புலப்படும். இவ்விதம் உலகிலுள்ள எப்பொருளும் கண், காது, மூக்கு, நாக்கு, தொடுதல் இவைகளில் அநேகமாக ஏதாவதொன்றுக்குப் புலப்படுவதாகவே இருக்கிறது. கடவுள் இவையெல்லாவற்றையுமே சிருஷ்டித்து இவைகளுக்கு மேல் நிற்பவர். ஆதலால் அவர் நமது இந்திரியங்களுக்கு அடங்கிப் புலப்படார். அதுவே அவருடைய அருவத்தன்மை. மின்சாரம் கம்பியில் வரும்போது அருவமாயிருப்பினும் ஓர் கண்ணாடி மூடியையும் காற்றடக்கமான சிறு கம்பியையும் அதனுடன் சேர்ப்பின் கண்ணுக்கு ஒளி வீசும் ஒரு ஜோதியாய் விளங்குவதுபோல் அன்பர்களின் ஹிருதயமென்னும் மூடியையும், பக்தி என்னும் கம்பியையும் பூட்டிட உடனே ஈசன் ஜகஜ் ஜோதியாய் திவ்ய மங்கள ரூபமாய் விளங்குகிறார். சூரியன் ஏரிகளிலும் ஆறுகளிலும் குளங்களிலும் சமுத்திரங்களிலும் உள்ள தண்ணீரைத் தனது கிரணங்களால் இழுத்துக்கொள்ளும்போது உயரச் செல்லும் அந்நீர் கண்களுக்குப் புலப்படாமல் அருவமாயிருப்பினும் அது நீலமேகமாகிப் பொழியும் போது உருவமாக மாறுவதுபோல ஆண்டவன் அருவமாயும், பிரும்மா, விஷ்ணு, சிவன், சக்தி எனும் அநேக உருவமாயும் இருக்கிறார். ஒரு நாட்டில் வசிப்பதற்காக

அரசாங்க வரி செலுத்துவதுபோல் இப்பிரபஞ்சத்தில் நாம் வசிப்பதற்காகக் கடவுளுக்கான கடமையையும் செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறேம். அல்லும் பகலும் இறைவனையே நாடி வேறு ஆசையையும் மறந்து ஈசன் அருளைப் பெற்றவன் ஒருவன் இவ்வுலகத்தில் இருந் தானேயாஞல் அவனைத் தரிசிப்பதிஞல் உலகிலுள்ள மாந்தர்கள் அடையும் நன்மையே, பொருள் முதலிய எல்லாவற்றையும் விட மேலானது.

மேற்சொன்னவைகள் நாம் எல்லோரும் அனுஷ் டிக்கவேண்டிய முக்கியமான சாமான்ய தர்மங்கள். இவைகளைப் படிப்பதோடு மட்டும் நிற்காமல் நாம் எல்லோரும் இவ்வேழு தர்மங்களையும் காரியத்திலே யும் நடத்திவர வேண்டும். இவ்விதம் நாம் எல்லோரும் நடந்துகொள்ளும்படி ஈசன் அருள்புரிவாராக.

சுபம்.

---

## உருத்திர பசுபதி நாயஞர்

ஔவையாரிடம் முருகன் எது பெரிது என்று கேட்டபோது அதற்கு ஔவையார், உலகம் பெரிது என்றும், அதைவிட அதனைச் சுமக்கும் ஆதிசேஷன் என்ற பாம்பு பெரிது என்றும், அப்பாம்பை உமையவள் தன் சுண்டுவிரலில் மோதிரமாக அணிகின்ருள் என் றும், அவ்வுமையம்மையை இறைவன் தன் உடம்பில் பாதியாகக் கொண்டுள்ளார் என்றும், அவ்வளவு சக்தி வாய்ந்த இறைவனையே தம்முள்ளத்துள் அடக்குகின்ற ஆற்றல் அன்புவழி பெற்றவர்கள் அடியவர்கள் என் றும், ஆகவே அடியார்களே மிகப் பெரியவர்கள் என்றும் கூறிஞராம்.

இதனையே மாணிக்கவாசகப்பெருமானும் தம் திருவாசகத்துள்

"உடையாள் உன்றன் நடுவிருக்கும்
உடையாள் நடுவுள் நீயிருத்தி
அடியேன் நடுவிள் இருவீரும் இருப்பதனல்
அடியேன் உன் அடியார்நடுவுள் இருக்கும்
அருளைப் புரிவாய்"

என்று வேண்டுகிருர். ஆகவே நம் நாட்டில் அடியவர்களையே ஆண்டவனுக வழிபடும் பண்பாடு இன்றுவரை இருந்து வருகின்றது. அப்படிச் சிறப்புப்பெற்ற அடியார்கள் பலருள்ளும் அறுபத்து மூன்று நாயன்மார்கள் மிகவும் பெருமை பெற்றவர்களாக நம்மால் கொண்டாடப்பெற்று வருகின்றனர். அவ்வறுபத்து மூன்று நாயன்மார்களுள் பன்னிரண்டு அடியார்கள் நான்மறை ஓதும் அந்தணர் குடிப்பிறந்தவர்கள்.

அவர்களுள்ளேயும் நான்மறை மந்திரம் ஓதி சிவனடி சேர்ந்த பெருமையினை யுடையவர் நம் உருத்திர பசுபதி நாயனுராவார். இவர் காவிரிபாயும் வளமுடைய சோழ நாட்டில் திருத்தலையூர் என்னும் ஊரில் அவதரித்தவர்.

அத்திருத்தலையூரில் சிவபெருமான் அருளிய வேத நூல் வழி வேள்வித் தீ வளர்க்கும் அந்தணர்கள் பலர் வாழ்ந்தனர். அவ்வேள்வித்தீயின் பயனுல் பருவமழை தவருது பெய்து வளம்கொண்டதாக அவ்வூர் விளங்கிற்று. அவ்வாறு சிறப்புடைய அந்தணர் குலத்திலே தோன்றிய நம் உருத்திர பசுபதி நாயனுர் தூயதன்மையுடன் சிவபெருமானின் அடிமைத்திறத்தை விரும்பி வேதத்தில் விளங்கும் உருத்திர மந்திரத்தை (ஸ்ரீருத்ரம்) அன்போடு இடையருமல் மனத்தில் ஓதிக்கொண்டு இறைவன் திருவடிகளைத் துதிக்கும் இயல்பினர்.

ஸ்ரீருத்திரம் என்ற மந்திரம் ஸ்ரீருத்ரப்ரச்னம், ஸ்ரீருத்ர சூக்தம், ஸ்ரீருத்ராநுவாகம் எனப் பல பெயர் களால் வழங்கப்பெறும். ஸ்ரீ என்பது பார்வதி தேவி, சம்பத்து, காந்தி என்ற மூன்றையும் குறிக்கும். இம் மூன்றுடன் கூடியிருக்கும் சிவபெருமானே ஸ்ரீருத்ரன் எனப்பெயர் பெற்ருர். (ருத்—துன்பம், திரன்—நீக்கு பவன்) அவருக்குரிய மந்திரம் ஸ்ரீருத்திர மந்திரமாகும். ஸ்ரீருத்திர மந்திரம் இருக்கு, யஜுர், சாமம் என்ற வேதங்களில் நடுவிலுள்ள யஜுர் வேதத்தின் ஏழு காண்டங்களுள் நான்காவது காண்டத்துள் நடுவி லிருக்கும் பதினோராவது அநுவாகத்தில் நடுவதாகிய ஆருவது சூக்தத்தில் விளங்குவது. பதினேரு அநுவா கங்களாகிய உட்பிரிவுகளை உடையதால் ஸ்ரீருத்ரம் "உருத்திரை காதச நீ" எனப் பெயர் பெறும். வேதத் தில் மிகச் சிறப்புற்ற பகுதி ஸ்ரீருத்திரமாகும். வேத புருடனுக்குக் கண்போன்றது ஸ்ரீருத்திரமேயாகும்.

இவ்வாறு சிறப்புப்பெற்ற ஸ்ரீருத்திர மந்திரத்தை நம் உருத்திர பசுபதி நாயனூர் செந்தாமரைகள் மலர்ந்த தடாகத்தில் இறங்கி கழுத்தளவுள்ள நீரில் நின்று கொண்டு இரவும் பகலும் இடைவிடாது சிலநாட்கள் வரை ஒருமை மனத்துடன் ஓதி வந்தார்.

இம்முறையில் பசுபதியார் செய்துவந்த தவப் பெருமையினையும், உத்திரமந்திரத்தினுடைய நியதி யின் அளவு மிகுந்த நிற்றலையும் கண்டு சிவபெருமான் திருவுள்ளம் மகிழ்ந்து அவருக்கு முத்தியின்பத்தை அளித்து என்றும் இன்பமுடன் வாழ அருள்புரிந்தார்.

உருத்திர மந்திரத்தை இடைவிடாமல் ஓதி இறை வன் திருவடிகளை அடைந்ததால் இவருக்கு உருத்திர பசுபதியார் என நாமம் வழங்குவதாயிற்று.

"உருத்திர பசுபதிக்கும் அடியேன்" என்று சைவ சமயாசாரியார்கள் நால்வருள் ஒருவரான ஸ்ரீசுந்தர

மூர்த்தி சுவாமிகள் இவரைப் போற்றுவதால் இவர் பெருமையினை நாம் நன்கு அறியலாம். அடியார்களை வணங்கி ஆண்டவன் திருவடிகளைப் பெற முயல்வது நம்மனோர் கடமையாகும்.

---

*ஸ்ரீ மீனாக்ஷி அஷ்டாவஸரத்யானங்கள்*

## ஸ்ரீ மீனாக்ஷியம்மன் ஸ்தோத்திரம்

1. அருண, கிரண ஜாலை:, ரஞ்ஜிதா, ஸாவகாசா, வித்ருத, ஜப, வடீகா, புஸ்தகாபீதி, ஹஸ்தா! இதர கரவராட்யா, புல்ல, கல் ஹார, ஸம்ஸ்த்தா, நிவஸது, ஹ்ருதி, பாலா, நித்ய கல்யாணசீலா,

2. உத்யத், பாஸ்வத், ஸமாபாம், உதித, நவ ஜபாம்,இந்து, கண்டாவதம் ஸாம், ஜ்யோதிர்,மௌளீம், த்ரிணேத்ராம், விவித, மணிலஸத், குண்டலாம், பத்ம ஸம்ஸ்தாம்! ஹாரக்ரைவேய காந்தீ, குணமபி, வல யோத்யத், விசித்ராம் பராட்யாம், அம்பாம், பாசாங்கு சாட்யாம், அபய வரகராம், அம்பிகாம், தாம், நமாமி.

3. மாயா, குண்டலினீ, க்ரியா, மதுமதீ, காளீ கலா, மாலினீ, மாதங்கீ, விஜயா, ஜயா, பகவதீ, தேவீ, சிவா, சாம்பவீ | சக்தி:, சங்கரவல்லபா, த்ரிணயநா, வாக்வாதினீ, பாரதீ, ஹ்ரீங்காரீ, த்ரிபுரா, பராபரமயீ, மாதா, குமாரீ, ஹ்யஸி !!

4. த்யாயேஹம், ரத்னபீடே, சுககுல படிதம், ச்ருண்வதீம், ச்யாம காத்ரீம், ந்யஸ்தை காங்க்ரிம், ஸரோஜே, சசி, சகல தராம், வல்லகீம், வாதயந்தீம் | கல்ஹாராபத்தமௌளீம், நியமித, விலஸத், சூளிகாம், ரக்த வஸ்த்ராம், மாதங்கீம், பூஷிதாங்கீம், மதுமத, முதிதாம், சித்ரகோத்பாஸி, பாலாம்,

5. பாலார்க்காருண, பத்ம, பீட நிலயாம், வாமாதி, சக்த்யாவ்ருதாம், ஏலாகந்தி, ஸுகுந்தலாம்,

தவிநயனும், ஹேமாம் பராலங்க்ருதாம் ! வாமே, லம்பித, தோர்லதாம், ஸுசரணும், தக்ஷே, கரேந்தீவராம், ச்யா மாபாம், சரதிந்து, சாரு, வதனும், த்யாயேத், ஸுமீனே க்ஷணும் !!

6. மாதங்கீம், பூஷிதாங்கீம், மதுமத, விவசாம், கூர்ண, மீனுக்ஷி, யுக்மாம், ஸ்வேதத், வக்த்ராம், கதம்ப, ப்ரஸவ, பரிலஸத், வேணிகா மார்த்த வீணும், ! பிம் போஷ்டீம், ரக்தவஸ்த்ராம், ம்ருகமத, திலகாம், இந்து ரேகாவதம்ஸாம், கர்ணேரத்யத் சங்க பத்ராம், கடின குசபரா க்ராந்த காந்தாவலக்னும்,

7. ஹ்ரீங்காராஸன, கர்பிதானல, சிகாம், ஸெள: க்லீம், கலாம், பிப்ரதீம், ஸெளவர்ணும் பரதாரிணீம், வரஸுதாம், தெளதாம், த்ரிணேத்ரோஜ்வலாம் | வந்தே புஸ்தக, பாச, மங்குச, தராம், ஸ்ரக் பூஷிதாமுஜ்வலாம், தவாம், கெளரீம், த்ரிபுராத், பரா பர கலாம், ஸ்ரீ சக்ர, ஸஞ்சாரிணீம் !!

8. சுத்தம், பிந்து யுதம், விஸர்க, ஸஹிதம், ஹ்ருல்லே கயா, ச்ரீயுதம், பாலா, ஸம்புடிதம், தைவ, பரயா, ச்ரீவித்யயாலங்க்ருதம் ! ஆரோஹாதவரோஹ, தத்வ, ஜபயா, மந்த்ரம், புனர்மாலினீம், ச்ரீ சக்ராதி, ஸுகேசவாதி, ஸஹிதோ, ஷோடா, விதா, சோபினீ ||

---

ஸ்ரீ கணேசாய நம :

## ஸுந்தரேச ஸ்தோத்திரம்

1. கல்யாண, சைல, பரிகல்பித, கார் முகாய, மெளர்வீக்ருதாகில, மஹோரக, நாயகாய | ப்ருத்வீர தாய, கமலாபதி, ஸாயகாய ஹாலாஸ்ய மத்ய நில யாய, நம : சிவாய ||

2. பக்தார்தி, பஞ்ஜனபராய, பராத்பராய, காலாப்ர, காந்தி, கரளாங்கித, கந்தராய ! பூதேச்வராய

புவனத்ரய, காரணய, ஹாலாஸ்ய மத்ய நிலயாய, நம : சிவாய !!

3. பூதார, மூர்த்தி, ஹரிம் ருக்ய, பதாம்புஜாய, ஹம்ஸாப்ஜஸம்பவ, ஸுதூர, ஸுமஸ்தகாய ! ஜ்யோதிர் மய, ஸ்புரித திவ்ய, வபுர்த்ராய, ஹாலாஸ்ய மத்ய நிலயாய, நம: சிவாய !!

4. கா்தம்ப, கானன, நிவாஸ, குதூஹலாய, காந்தார்த்த, பாக, கமனீய, க்லேவராய ! காலாந்த காய, கருணாம்ருத, ஸாகராய ஹாலாஸ்ய மத்ய நிலயாய, நம : சிவாய !!

5. விச்வேச்வராய, விபுதேச்வர, பூஜிதாய, வித்யா, விசிஷ்டவிதி தாத்ம, ஸுவைபவாய ! வித்யா ப்ரதாய, விமலேந்த்ர விமான காய, ஹாலாஸ்ய மத்ய நிலயாய, நம : சிவாய !!

6. ஸம்பத் ப்ரதாய, ஸகலாகம, மஸ்தகேஷு, ஸங்கோஷி தாத்ம விபவாய, ஸதாசிவாய ! ஸர்வாத் மனே, ஸகல துக்க, ஸமூல ஹந்த்ரே, ஹாலாஸ்ய மத்ய நிலயாய, நம : சிவாய !!

7. கங்காதராய, கருடத்வஜ, வந்திதாய கந்தஸ் புரத் புஜக குண்டல, மண்டிதாய ! கந்தர்வ, கின்னர, ஸுகீத, குணாதி காய, ஹாலாஸ்ய மத்ய நிலயாய, நம : சிவாய !!

8. பாணிம், ப்ரக்ருஹ்ய, மலயத்வஜ, பூப, புத்ரியா : பாண்ட்யேச்வர: ஸ்வயம பூத், பரமேச்வரோய: தஸ்மை, ஜகத் ப்ரதித, ஸுந்தர பாண்டிய நாம்னே, ஹாலாஸ்ய மத்ய நிலயாய நம : சிவாய !! கீர்வாண, தேசிக, கிராமபி, தூரகம், யத், வக்தும், மஹத் த்வமிஹ, கோ, பவத : ப்ரவீண : ! சம்போ, க்ஷமஸ்வ, பகவத் சரண ரவிந்த, பக்த்யா, க்ருதாம், ஸ்துதிமிமாம், மமஸுந்தரேச !

# சமுதாயத்தில் நாம்

ஆஸ்தீக அன்பர்களே! இந்த அகண்ட பூமண்டலத்தில் நமது பாரத நாடு சாக்ஷாத் பரமாத்மாவின் லீலா ஸ்வரூபங்களில் நம்பிக்கைகொண்ட மஹான்கள் நிறைந்த நாடு. வசிஷ்டாதி மஹரிஷிகள் பலவிதமான பரீக்ஷைகளில் ஸ்ப்புடம் செய்து, **திக்பலம், க்ஷத்ரிய பலம், பிர்மதேஜோபலம், பலம்,** என்று உறுதிகொண்டு நின்ற சந்ததிகளாகிய நமது விப்ற சமுகம் ஷைமுன்னோர்களின் வாக்கியப்படி உள்ள அனுஷ்டானங்களைத் தவருமல் அனுஷ்டிப்பதின் நிமித்தம்தான் நதிதீரங்களில் குடியேறினேமேதவிர மற்ற எந்த மானிட வர்க்கத்தாருக்கும் இடஞ்சலுக்காக இல்லை. இன்றுள்ள சில மனிதர்கள் இதையும் பழிக்கிருர்கள்.

நம் பாரத பூமியின் சீதோஷ்ண நிலை கண்டுதான் ஆண், பெண் அனைவரும் தலையில் சிகையுடன் இருக்க வேண்டும் என்று நம் பெரியோர்கள் வகுத்தார்கள். மேற்கத்திய அநாகரீகம் வந்து நம்மை ஏமாற்றி நம்மை ஆண்டியாக்கினதுடன், நிர்வானதேசத்தில் கோவணம் கட்டியவன் பயித்தியக்காரன் என்ற நிலைக்கு வளர்ந்து வந்து இன்று சிகை வைத்தவனைக் குடுமிக்காரன் என்று ஏசக்கூடிய கட்டத்திற்கும் வந்துவிட்டது. உண்மையில் நமது ஆஸ்திக மஹா ஜனங்கள் தான் நம் நாட்டில் அதிகம். இப்படி இருக்கின்ற நம்மை நூறில் மூன்று பங்கு தொகைதான் என்றும் பிதற்றுகிருர்கள் நமது துஷ்பிரசாரகர்கள். பிருமணர்களை ஒன்ருகவும், இதர எல்லா ஜாதிகளையும் ஒன்ருகவும் பிரித்து பிரித்து ஏற்பாடு செய்தார்கள் ஷையார்கள். நமது மாகாணத்தில் உள்ள எல்லா ஜாதிகளிலும் உள்ள உட்பிரிவுகளை நீக்கி ஜாதிவாரியாகப் பார்த்தால் நமது விப்ற சமுதாயம் எண்ணிக்கையில் அதிகமாகத்தான்

இருக்கும், இந்த ஏமாற்று வித்தையிலும் நாம் பயப்பட வேண்டாம். அரசியல், பொருளாதாரம், சமூகசேவை போன்ற எந்தக் காரியத்திலும் நம் முன்னோர்கள முன்னால் நிற்கப் பின் தங்கியதே கிடையாது. ஆகையால், ஆஸ்தீகப்பெருமக்களே! நான் பிருமணன் என்று சொல்லிக்கொள்ளவோ, சிகை வைத்துக்கொள்ளவோ, வேத சாஸ்திரங்கள் பயிலவோ, கர்மானுஷ்டானங்களைச் செய்யவோ பயப்படவேண்டியதே கிடையாது.

ஆகையால் வேதபுருஷனும் மஹரிஷிகளாலும் வகுக்கப்பட்ட கர்மானுஷ்டானங்களைக் கூடுமானவரையில் தானும் செய்து மற்றவர்களுக்கும் செய்துவைப்பதைத் தொழிலாகக்கொண்ட வைதிக உபாத்யாயர்களின் நிலைமை உயரவும் விப்ரர்களின் கர்மாக்கள் சரிவர நடக்கவும்தான் இந்த வைதிக ஸமாஜம் ஆரம்பிக்கப்பட்டது. ஆஸ்தீகப் பெருமக்கள்தான் இந்த வைதிக ஆத்மாக்களுக்கு விவசாய பூமி. இதில் வரும் வருவாயைக் கொண்டுதான் இவர்கள் குடும்பம் பூராவும் நடக்கவேணடும். இன்றுள்ள அகவிலேயோ அனைவரும் அறிந்ததே. நான் வைதிகன் என்று எந்த வியாபாரியிடமும் சென்று, கொஞ்சம் மலிவாகக் கொடு என்று கேட்கவோ!, வீட்டுக்காரரிடம் குறைந்த வாடகை வாங்கிக்கொள்ளுங்கள் என்றோ சொல்லமுடியுமா? கிரஹஸ்தர்கள் செய்யும் விசேஷங்களில் கொஞ்சம் அதிகமாகக் கொடுக்கும்படி கேட்டால் சிலர் நாங்கள் புக்தமும் செய்துவைத்து தக்ஷிணையும் கொடுக்கிறோமே நீங்கள் இதற்கு பேரம் பேசலாமா என்றும் கேட்கிறார்கள். தன் கிரஹத்துக்கு வரும் வைதிகர்களுக்குத்தான் புக்தமுண்டே தவிர வைதிகர்கள் குடும்பங்களின் நிலை என்ன என்பதையும் ஆலோசிக்க வேண்டாமா? ஆகையால் ஆஸ்திகப் பெருமக்களே இதரச்சிலவுகள் எப்படித் தவிர்க்க முடியாததோ அதே போல் வைதிகச் சிலவையும் நினைத்துக் கூடுமானவரை

யில் இதுவிஷயத்தில் குறைக்காமல் செலவு செய்தால் நல்லது. அதனுல் தங்கள் கர்மாக்களும் சிறுவதுடன் ஏழை வைதிகக் குடும்பங்களும் வாழ்வழியுண்டாகும்.

கடன் கொடுத்தேதான் தீரும், வழி நடந்தேதான் தீரும். என்றபடி நம் முன்னேர்களான மஹரிஷிகள் நாம் வாழவேண்டியே கர்மானுஷ்டானங்களை உண்டாக்கிஞர்கள். அதில் மாத்ரு பித்ரு சிரார்த்தம் மிகவும் அவசியம். இதில் முக்கியம் என்னவென்றுல் நாம் தினப்படி சாப்பிடுவதுபோல் நமக்கு ஒரு வருஷம்தான், நம் தாய் தகப்பனுக்கு ஒரு நாள். ஆகையால் நாம் செய்யும் சிரார்த்தம் அவர்களுக்கு தினம் சாப்பாடு போடுவது போல. ஆகையால் நம்மை வளர்த்த கடன் தீர அன்று ஓர் தினமாவது சிரத்தையுடன் நாம் இருக்கவேண்டும். நாம் அப்படிச் செய்தால்தான் நம் சந்ததியாரும் அப்படிச் செய்வார்கள். முக்கியமாக எல்லோரும் சந்தியாவந்தனத்தையாவது தினம் விடாமல் செய்யவேண்டும். கோத்திரம் என்பது நமது வம்ச பரம்பரையையும், சூத்ரம் என்பது நம் புரோகித பரம்பரையையும் காட்டுகிறபடியால் நாம் மை முன்னேர்கள் செய்தவற்றை அப்படியே செய்யவேண்டியதான் நம் கடமை. மேற்கூறிய எல்லா விஷயங்களையும் நன்கு பரிசீலித்து ஆஸ்திகர்கள் அனைவரும் எங்கள் ஸமாஜத்துக்கு போஷகர்களாக இருந்து இதுமென்மேலும் விருத்தியடைய உதவி செய்ய வேண்டுமாயும் தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன்.

இங்ஙனம்
தங்கள் அன்புள்ள,
**T. C. ஏகாம்பரம் தீக்ஷிதர்,**
தலைவர்.




வைதீக ஸமாஜம் மெம்பர்கள்.

# திருக்கல்யாணம்.

மன்னுதி மன்னன் மலையத்துவஜ பாண்டியனும் மஹாராரணி காஞ்சன மாலை அம்மையும் மக்கட் பேறு இல்லாமல் கடும் தவம் புரிந்து செய்த வேள்வியி னின்றும் மூன்று ஸ்தனங்களுடன் அதிசயிக்கத்தக்க வகையில் உண்டான குழந்தையை மடிமீதிருத்தி அழகு பார்க்கும் போது பெண்ணுருவத்தில் புதிய மாறு தலைக் கண்டு விசாரிக்குங்கால் அசரீரி ரூபமாக ஹே ராஜன் அஞ்சாதே. அம்மையை மணக்கத்தக்க வரன் தரிசனமாகும்போது அந்த மூன்ருவது தனம் மறையும் உன் அக்ஞானமும் நீங்கும் என்ற அருள் வாக்குப்படி மலையத்வஜனுக்குப் பின் மகுடமேந்திய தடாதகைப் பிருட்டி கன்னிப்பருவமடைந்து களிப்புடனிருக்குங்கால் காஞ்சனமாலை குழந்தாய் உனக்குகந்த கணவன் கிடைத்து என் கலி என்று தீரும் என்று ஏங்கி நிற்க, தேவியும் தாய்க்கு ஆறுதல் கூறி நாலுவிதப் படைக ளுடன் திக் விஜயம் செய்யப் புறப்பட்டபோது அம்மைக்குப் பாதுகாப்பாகவும் வீரச்செயலைப் பார்த்து மகிழவும் சுந்தரேசப் பெருமான் ஆலவா யழகன் என்ற பெயருடன் மனித உருவத்தில் கூட சென்ருர். ஸகலரையும் அடி பணிய வைத்து ஈசான்ய திக்கின் அதிபனை பரமேஸ்வரனிடம் இருந்த பூதகணங் களை வெற்றி கொண்ட செய்தி கேட்டு பரமேஸ்வரன் தானே அம்மையின் முன் தோன்றி உற்று நோக்கிய வுடன் மூன்ருவது தனம் மறைய இந்த விஷயத்தை தோழி சொல்லக் கேட்டு அம்பிகை நாணம் கொண்டு இறைவனடி பணிந்தாள் ஆலவாயழகன் அங்கயர் கண்ணியே உன்னை ஆட்க்கொள்ளவே நான் வந்தேன். என்று சொல்ல தேவியானவள் ஈசனே பண்டை முறைப்படி என் தாயிடம் தாங்கள் நேரில் கலந்து என்னை மணந்து கொள்ள வேண்டும் எனப் பகர்ந்தாள்

அப்படியே ஆலவாய் அழகனும் காஞ்சனமாலையிடம் கேட்டு அவள் வேண்டுகோளின்படி சுந்தர பாண்டியன் என்ற பெயருடன் ஸகல தேவர்களும் புடை சூழ நவ ரத்தின மண்டபத்தில் திருமணம் செய்து கொண்டு மதுரையை அரசு புரிந்தார்.

இந்த வைபவமானது கதையல்ல கற்பனையுமல்ல. நடந்த நிகழ்ச்சியே என்பதை இந்த ஹாலாஸ்ய நகரின் சிறப்பை அறிந்தவர் எவரும் மறுக்க மாட்டார்கள் பார்வதி பரமேஸ்வரரும் பண்டை காலப் பண்பாட்டுக்குக் கட்டுப் பட்டு முறைப்படி விவாஹம் செய்திருக்க நாம் ஏன் பெரியோர்களின் வழியினின்று விலகி விவாஹாதிகளை நமது இஷ்டம் போலச் செய்து தர்ம மார்க்கம் கெட்டு இன்னலுற வேண்டும், ஆகையால் ஆஸ்தீகப் பெருமக்களே நமது பெரியோர்கள் செய்து வந்த படி விவாஹாதி சடங்குகளை நல்ல முறையில் செய்து நாமும் நமது சந்ததியாரும் நலமுடன் வாழ வேண்டும் என்றும் கேட்டுக் கொள்வதுடன் எந்த விசேஷம் செய்தாலும் நமது சக்திக்குத் தகுந்தபடி வைதிகச் செலவு செய்து வேதத்தை நம்பித் தொழிலாகக் கொண்ட வைதிக பரம்பரையும் வாழ வழி செய்யும்படியும் தர்மத்தின் பெயரால் மன்றாடிக் கேட்டுக்கொள்கிறோம்.

சுபம்.

---

## ஸ்ரீ சங்கர பகவத்பாத விரசிதம் அபீஷ்டாஷ்டகம்.

1. மணிமய, வரதர்பே, ஹஸ்த, பத்மே, வரேண்யே। மதுரஸயுத, பாத்ரே, மால்ய, காத்ரே, ஸுநேத்ரே ॥ வசன, மதுர, தாரே, பாணி, பத்மாங்க்ரியுக்மே। ஜனனி, பவதி, பிக்ஷாம், தேஹி, மீனாக்ஷி, மஹ்யம் ॥

2. ஜய, ஸுமுக, கதம்பே, ரத்ன, ஸிம்மா ஸ்னஸ்தே| கனக, ஸத்ருச, சாபே, ப்ரும்ம, தேவேந்த்ர வந்த்யே|| உதய, ரவி, நிபேசே, ரம்ய, பத்மாங்க்ரி யுக்மே| ஜனனி, பவதி, பிக்ஷாம், தேஹி, மீனுக்ஷி, மஹ்யம் ||

3. உபனிஷ துதிதார்த்தே, க்ஞான, ஸாம்ராஜ்ய, லக்ஷ்மீ| பத, நிபுண, கடாக்ஷே, பக்த, லோகாய, நித்யம்|| ஸுமுக, விமல! மூர்த்தே, ஸச்சிதானந்த கீர்த்தே| ஜனனி, பவதி, பிக்ஷாம், தேஹி, மீனுக்ஷி, மஹ்யம் ||

4. மரகத, மணி, காந்தே, மன்மதாராதி, காந்தே| கரத்ருத, சுகவீணே, கான, வித்யா, ப்ரவீணே|| கமன, விஜித, ஹம்ஸே, கௌரி, சந்த்ராவதம்ஸே| ஜனனி, பவதி, பிக்ஷாம், தேஹி, மீனுக்ஷி, மஹ்யம் ||

5. மலயஜ, குல, சந்த்ரே, மஞ்ஜு கஸ்தூரி, லிப்தே| விவித, மணி, விபூஷே, ச்லிஷ்ட கௌசேய, வாஸே|| ஸதத, ருசிர, தேஹே, ச்யாமளே, சம்புலீலே| ஜனனி பவதி, பிக்ஷாம், தேஹி, மீனுக்ஷி, மஹ்யம் ||

6. கபட, ஹ்ருதய, தூரே, காமிதார்த்தப் ரதானே| மதன், ரிபு, விநோதே, மந்த ஹாஸ, ப்ரமோதே|| விவித, ஜன, சரண்யே, விச்வ மாத:, ப்ரஸன்னே| ஜனனி, பவதி, பிக்ஷாம், தேஹி, மீனுக்ஷி, மஹ்யம் ||

7. ஜய, ஜய, ஜகதம்பே, ச்ரீகதம்பாங்கணஸ்தே| ஜய, ஜய, கருணப்தே, ஜன்ம, ம்ருத்யூ, விதார்யே|| ஜய, ஜய, ஜய, சீலே, ஜன்ம பாஜாம், சரண்யே| ஜனனி, பவதி, பிக்ஷாம், தேஹி, மீனுக்ஷி, மஹ்யம் ||

8. தரணி, ஸலில, வன்னி, ஸ்பர்சன, வ்யோம, காத்ரே| த்யுதி, மணி, ஸுக்ருதக்ஞே, தீபதத்வே, மனோக்ஞே ஸகல, ஹ்ருதய, பூர்ணே, த்வன்ன, பூர்ணே, நிதாந்தே| ஜனனி, பவதி, பிக்ஷாம், தேஹி, மீனுக்ஷி, மஹ்யம் || படதி சுபம பீஷ்டம், யோஷ்டகம், ஹ்ருத்ஸு பக்த்யா| பதி, ஸுத, தன தான்யம், ப்ராப்னுயாத்,

ஸோபி, நித்யம் ॥ சிவமிதி, த்ருடபக்த்யா ஆயுராரோக்ய, ஸித்திம் । ஸகல, நிகம, தத்வம், சங்கரீ, த்வத், ப்ரஸாதாத் ॥

---

## மேலும் வளர்ந்தோங்குக.

மதுரை வைதிக சமாஜத்தின் வெள்ளிவிழா இந்நகரத்தின் சரித்திரத்தில் மிக குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியாகும். இரண்டு வைதிகர்கள் ஒன்று சேர்வது கஷ்டமென்க் கூறுவதுண்டு இந்த வார்த்தையை மதுரை பொய்ப்பித்துவிட்டது. வைதிகர்களுக்கும் சரி, லௌகிகர்களுக்கும் சரி, இந்த சமாஜம் பெரிதும் பிரயோஜனமுள்ளதாகும்.

ஏந்த் சடங்கும், மந்திரங்களின் அர்த்தங்களைத் தெரிந்துகொண்டு செய்வது மிகவும் சிறந்தது. விவாக மந்திரங்களின் அர்த்தங்களை விளக்க இந்த சமாஜத்தார் பல உபன்யாசங்களுக்கு ஏற்பாடு செய்தனர். மந்திரங்களின் அர்த்தங்களைக் கேட்டபோது அற்புதமாக இருந்தது. நமது ரிஷிகள் மனித இனத்தின் மீது கொண்டுள்ள கருணையும், பரிவும் இந்த மந்திரார்த்தங்களைக் கேட்டபோது புலனானது. இந்த மாதிரி நமக்கு தெரியவேண்டியவைகள் எவ்வளவோ இருக்கின்றன. மந்திரங்களின் அர்த்தங்களை, வியாக்யானங்களைக் கேட்கக் கேட்க, கிரியைகளில் சிரத்தை இல்லாதவர்களுக்குக் கூட சிரத்தை ஏற்படும் என்பது நிச்சயம்.

இப்படி பல வகைகளில் கிரகஸ்தர்களுக்கு உபகாரமாக இருக்கும் வைதிக சமாஜம் மேலும் வளர்ந்தோங்குமென்று ஸ்ரீ மீனாக்ஷியை பிரார்த்திக்கின்றேன்.

**வெ. சந்தானம்,**
"தினமணி" பொறுப்பாசிரியர்.

॥ श्री: ॥



अभ्रमंभङ्गरहितमजडंविमलंसदा ।
आनन्दतीर्थमतुलंभजेतापत्रयापहम ॥

## ஸ்ரீ மத்வாசாரியார்.

1238 — 1317 A. D.

கால சக்ரச் சுழலில் ஜனங்கள் நெறி தவறி, ஒழுக்கம் குன்றி, பரம்பொருளை மறந்து, அகங்காரம் ஓங்கி, துக்கக் கடலிலாழ்ந்து தவிக்கும் பொழுது ஞானப் பாலையூட்டி நல்வழியைக்காட்டி பரம்பொருளின் கருணைக்கிடமாக்கி கரையேற்ற ஒருவர் கி. பி. 1238-ம் ஆண்டு அவதரித்தார். அவர் தான் ஸ்ரீ மத்வாச்சாரியார்.

சென்னை மாகாணத்தின் வடமேற்குக் கோடியில் உள்ள தென் கன்னட ஜில்லாவில் உடுப்பி க்ஷேத்திரத்திற்குத் தெற்கே ஏழுமைல் தூரத்தில் பாஜக க்ஷேத்திரத்தில் நாருயண பட்டர் என்னும் அந்தணர் ஒருவர் வேதவதி என்னும் பெண்மணியை மணந்து பிள்ளைப் பேறில்லாமல் வெகுநாளாகப் பரமாத்மாவை வழிபட்டுப் பலவித விரதங்களையும் அனுஷ்டித்து உடுப்பியிலுள்ள அனந்தேஸ்வரர் சன்னிதியில் விசேஷ சேவையையும் புரிந்துகொண்டு வந்தார். பகவான் கிருபை கூர்ந்ததால் அவருக்கு ஒரு மகவு பிறந்தது. அக் குழந்தை பிறந்தபொழுதே மிகவும் அழகாயும் எல்லா லக்ஷணங்களுள்ளதாயும் இருந்தது. நாளொரு

மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்த இப்பாலன் தன் பெற்றோருக்கும் மற்றெல்லாருக்கும் மகிழ்ச்சியைத் தன் விளையாட்டுகளாலும் மழலைச் சொற்களாலும் அளித்துக் கொண்டிருந்தான்.

வாசுதேவன் என்று பெயர் பூண்ட இப்பிள்ளைக்கு அவ்வவ்வயதுக்கேற்ப சடங்குகளைத் தந்தையான நாராயண பட்டர் செய்வித்து பாடங்களையும் கற்பித்தார். ஏழாமாண்டு உபநயனம் செய்வித்தார். வாசுதேவ பட்டருக்கு வயது ஆக ஆக இல்லற வாழ்க்கையில் பற்றில்லாமல் இருப்பதையும் துறவறம் பூண்டு சமூகத்தொண்டு புரிவதில் ஆழ்ந்த எண்ணமிருப்பதையும் கண்ட பெற்றோர்கள் தங்களுக்கு விருப்பமில்லாவிடினும், அவர் நோக்கப்படியே விட்டுவிட்டார்கள்.

அந்த ஸமயத்தில் உடுப்பியில் அச்சுத பிரேக்ஷர் என்னும் துறவி அனந்தேஸ்வரர் சன்னிதியில் தத்வோபதேசம் செய்துகொண்டு, இம்மதத்தை ஊக்கத்துடனும் மிகவும் துணிவுடனும் பரவச் செய்யத் தனக்குப் பிறகு ஒரு மஹான் வருவார் என்ற தனக்கு பரமாத்மா அருளிச் செய்த வார்த்தைப்படி ஒரு சீடரை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். அவரிடமே வாசுதேவ பட்டர் சென்று சன்னியாசம் பூண்டு சாஸ்திராப்பியாசம் செய்யத் துடங்கினார். தன்னுடைய சீடனுக்கு ஆனந்த தீர்த்தர் என்ற பெயரையும் கொடுத்து அச்சுத பிரேக்ஷர் தான் தெரிந்து கொண்ட சாஸ்திரத்தை யெல்லாம் சொல்லிக் கொடுத்து அவரை ஆசீர்வதித்தார்.

உலகத்தில் முக்தி மார்க்கத்தைப் பரவச் செய்யவே அவதரித்த ஆனந்த தீர்த்தர் வாயுபகவானேயாதலால் வெகு சீக்கிரத்திலே தன் அறிவை வெளிப்படுத்தித் தன் குருவையும் சந்தோஷத்திலாழ்த்தி ஜனங்களுக்கும் போதிக்கவாரம்பித்தார்.

குருவின் அனுமதியின் மேல் இப்பாரத புவி முழுவதும் சுற்றுப்பிரயாணம் செய்து ஆங்காங்கு தத்வ மார்க்கத்தை நிலை நாட்டி பதரிக்ஷேத்திரம் சென்று, ஸ்ரீ வியாஸ பகவானைக் கண்டு அவருடைய ஆக்ஞைப்படி நூல்களை இயற்றலானார். ஆனந்த தீர்தர் இமய மலை முதல் கன்யாகுமாரி முனை வரையில் எல்லா இடங்களிலுள்ள க்ஷேத்திரங்களுக்கும் சென்று அங்கு தன்னுடன் வர்தம் செய்ய வந்த பெரிய பண்டிதர்களை ஜெயித்து தன்னுடைய மதத்தை ஸ்தாபித்துள்ளார். இடை இடையே உடுபிக்கும் சென்று தன்னுடைய குருவைக்கண்டு தான் செய்த தொண்டுகளை அவரிடம் சமர்பித்து அவரையும் மகிழ்வித்தார்.

அப்பொழுது தென்கன்னடத்தில் கும்பளா என்னும் ஊரில் ஜயஸிம்ஹன் என்றொரு சிற்றரசன் இருந்தான். ஆனந்த தீர்த்தரின் மதக் கொள்கையையும் அவர் அதை விவரிக்கும் முறையையும் கேட்டு அவரிடம் மிகவும் பக்தி கொண்டவனாய் அவரை மிகவும் ஆதரவுடன் வரவழைத்து அவரை வழிபடத் தொடங்கினான். அச்சமயம் அக்கு பண்டிதகுல திலகரான திரு விக்ரம பண்டிதர் என்பவர் பலநாள்கள் ஆசாரியாருடன் வாதம் செய்து கடைசியில் ஆசார்யரின் மதமே மிகச் சிறந்ததாக ஒப்புக்கொண்டு அவருடைய சீடராகவும் ஆனார்.

இது போலவே மற்றொரு ஸமயம் ஆசார்யார் வடக்கே பிரயாணம் செய்து கொண்டிருந்த பொழுது சாமா சாஸ்திரி என்னும் பண்டிதரும், சோபனபட்டரென்னும் மற்றொரு பண்டிதரும் ஆசார்யருடன் 21 நாள்கள் வாதம் செய்து சம்பூர்ணமாகத் தங்கள் சந்தேகங்களை யெல்லாம் ஒழித்து அவரையே வழிபட ஆரம்பித்தார்கள். அவர்கள் இருவரும் ஆசாரியாரிடமிருந்து துறவறம் பெற்றுக்கொண்டார்கள். சாமா

சாஸ்திரி நரஹரி தீர்த்தரானூர். மற்றொருவர் பத்ம ஞப தீர்த்தரானூர். இவ்விருவரும் ஆசார்யருக்குப் பிறகு அவர் இயற்றிய நூல்களுக்கு உறையையும் எழுதி அவருடைய பட்டத்தையும் யேற்றூர்கள். நர ஹரி தீர்த்தர் கலிங்க நாட்டுச் சிற்றரசனை கஜபதி வம்சத்தவர்களுக்கு வேண்டிய குலத்திலுதித்தவர். ஆகையால் குல முறைப்படி கஜபதி வம்சத்து அரசன் சின்னவயதாக இருக்கும் பொழுது அந்த ராஜ்யத்தை ஆளும்அவசிய மேற்பட்டு அங்கு போகும் படி நேர்ந்தது. ஆசாரியாரின் உத்திரவின் படி அங்கு சென்று அக் கைங் காரியத்தை சரிவரச் செய்து வயது வந்த அரச னிடம் ராஜ்யத்தை ஒப்பிவித்து அவரிடம் விடை பெற்று மருபடியும் ஆசாரியாரிடம் வந்து விட்டார். வரும் பொழுது அவ்வரசனுடைய கஜானுவில் இருந்த புரா தனமான ராம, சீதா, விக்ரகங்களைப் பெற்றுக் கொண்டு வந்தார். அவைகளை ஆசாரியாரிடம் கொடுத்து அவருக்கும் மகிழ்ச்சி யளித்தார்.

உடுபியில், ஒரு சமயம் கடற்கரையோரத்தில் ஜபம் செய்து கொண்டிருக்கும் பொழுது பட கொன்று புயல் காற்றில் சிக்குண்டு தவிப்பதைக்கண்டு தன் வஸ்தி ரத்தின் ஒரு நுனியைப் பிடித்துப் படகை பார்த்துக் கரைக்கு வரும்படி சமிஞ்ஞை செய்யும் பாவனையில் ஆட்டினூர். படகு உடனே ஒருவித தீங்கு இல்லாமல் கரை வந்து சேர்ந்தது. மாலுமிக்கும் படகிலிருந்தவர் களுக்கும் அளவில்லாச்சந்தோஷம் உண்டாயிற்று நன்றியைச் செலுத்த கடமைப் பட்டவர்களாய் ஆசாரி யாருக்குத் தாங்கள் எதுவாயினும் கொடுக்கத் தயா ரென்று சொல்லி வேண்டியதைக் கேட்குமாறு வேண்டிக்கொண்டனர்.

ஆனுல் ஆசாரியாரோ படகில் பாரத்திற்க்காகப் போட்டிருந்த கோபி சந்தனக் கட்டிகளிரண்டை விரும்பினர். மிகவும் ஆச்சர்யத்துடன் படகோட்டிகள்

அக்கட்டிகளை மிகவும் கஷ்டத்துடன் கொண்டு வந்து சேர்த்தனர். அக்கட்டிகளை மிகவும் லகுவாய் எடுத்து உடைத்துக் காட்டினதில் அதில் புராதனமான கிர்ஷ்ண விக்ரஹ மிருப்பதைக் கண்ட ஜனங்கள் ஆச்சர்யப் பட்டு இவர் சாமன்ய புருஷரல்ல வென்று எண்ணிக் கொண்டனர். அந்த விக்ரஹத்தை உடுப்பியில் ஸ்தாபித்து அதன் பூஜையின் பொருட்டுத் தன்னுடைய சிடர்களான எட்டு ஸன்னியாசிகளை ஏவி இது மாதிரியே என்னும் நடக்கவேண்டுமென்று ஆக்ஞை செய்தார். அதுபோலவே இன்னும் உடுப்பியில் ஸ்ரீ கிர்ஷ்ணன் பூஜை எட்டு ஸ்வாமிகளாலேயே நடை பெறுகின்றது.

இப்படியாக அனேகவித ஆச்சர்ய மிகுந்த கார்யங்களைச் செய்து, தத்துவ மார்க்கத்தை நிலை நாட்டி, சிடர்களுக்கு உபதேசிக்குமாரு சொல்லி 1317-ம் ஆண்டு மாக சுத்த நவமியன்று எல்லாரும் வீற்றிருக்க உடுபியில் அனந்தேஸ்வரர் கோவிலில் பூ மழை விழ அதன் நடுவில் மறைந்தார். இன்னுளைக்கும் அவர் பதரி க்ஷேத்திரத்தில் விளங்கா நின்று பக்த கோடிகளை அனுக்ரஹித்துக் கொண்டிருக்கிறார்.

இவர் இயற்றிய நூல்கள் 1 பிர்ம சூத்திர பாஷ்யம் அனுவ்யாக்கியானம், நியாய விவரணம், அனு பாஷ்யம், கீதா பாஷ்யம், கீதா தாத்பர்ய நிர்ணயம், உபநிஷத் பாஷ்யம் (10), பிரகரணம் (10), பாரத தாத்பர்ய நிர்ணயம், பாகவத தாத்பர்ய நிர்ணயம், தந்திர ஸாரம், சதாசார ஸ்மிருதி, ஜயந்தி நிர்ணயம், யமகபாரதம், துவாதச ஸ்தோத்திரம், கிர்ஷ்ணஸ்துதி, நகஸ்துதி, ருக் பாஷ்யம், கிர்ஷ்ணமிருதமஹார்ணவம், யதிப்ரணவ கல்பம்.

இவருடைய மதச்சுருக்கமானது எல்லாம் வல்ல ஸ்ரீமன் நாராயணன் சர்வோத்துமன் எல்லா குணங்க

ஞுள்ளவன்: எல்லவற்றையும் ஆக்க அழிக்க காக்க சக்தியுள்ளவன்: படைக்கப் பெற்ற உலகம் முதலான சர்ாசர வஸ்துக்கள் உண்மையானவை. மாயை அல்ல. ஜீவன்களும் நிஜமான நித்யமான வஸ்துக்கள். வெவ்வேறானவை. தாரதம்யமுள்ளவை. மோக்ஷமென்பது ஒவ்வொரு ஜீவனுக்கும் உறிமையான சந்தோஷத்தின் விடா அனுபவம். இதற்கு அழிவு என்பது கிடையாது. இந்த அனுபவம் ஸ்ரீ ஹரியிடத்தில் அவனே ஸர்வோத்துமன் என்ற அறிவினல் அவனிடம் விடாது ஒரே பக்தியினல் உண்டாகக் கூடியது. பிரத்யக்ஷம், அனுமானம், ஆகமம், என்ற மூன்றே பிரமாணங்கள் பரமாத்மாவான நாராயணனை அறிய வேதங்களே பிரமாணம்.

'வேதாந்த ரத்னம்' பண்டிட்
N. ஸ்ரீனிவாஸ ஸர்மா,
ஸம்ஸ்கிருத லக்சரர்
மதுரா காலேஜ், மதுரை.

---

## சங்கீதமே மோக்ஷத்தைக் கொடுக்கும்.

பசுர்வேத்தி, சிசுர்வேத்தி, வேத்தி கானரஸம்பணி என்பதாக. பசு, சிஸு, பாம்பு, மலை முதலிய சேதன, அசேதனப்பொருள்கள் கூட ஸங்கீதத்தினல் சந்தோஷமடைகின்றது, என்பது சாதாரணமாய் எல்லோருக்கும் தெரிந்த விஷயம். ருக்ஸம்ஹிதை, யாக்ஞவல்க்ய ஸ்மிருதி முதலிய கிரந்தங்களில் பின் வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது. (த்ரிவாக்க பல,' தாஸ்ஸர்வே, தான யக்ஞ ஜபாதய: ஏகம் ஸங்கீதம் ஞானம் சதுர்வர்க்க பல்ப்ரதம்) தான யக்ஞ ஜபங்கள், தர்மம், அர்த்தம், காமம் என்ற மூன்று பலனைத்தான் தரும். ஸங்கீதம் ஒன்றே நான்காவதான மோக்ஷத்தைக் கொடுக்கும் வீணவாதந; தத்வக்ஞ: ஸ்ருதி சாஸ்த்ர விஸாரத:

த்ராள்க்ஞாம்ஸச்ச அப்ரயாஸேந மோக்ஷ மார்க்கம் ஸகச்சதி: இந்த ஸங்கீதம் ஸாமவேதத்திலிருந்து உண்டானது. (ஸாமவேதாத் . இதம் கீதம், ஸஞ்சக ராஹ பிதாமஹ:) ப்ரம்மாவானவர் ஸாமவேதத்தி லிருந்து பொருக்கி எடுத்தார் என்பதும் ஸாமவேதத் தின் உபவேதமே ஸங்கீதம். ஸ்ரீ கிருஷ்ண பகவான் கீதையில் வேதாநாம், ஸாமவேதோஸ்மி, என்று வேதங் களில் ஸாமவேதமாயிருக்கிறேன் என்றார். மீனாக்ஷி அஷ்டோத்திரத்திலும் ஸாமவேதப்ரியா ஸௌம்யா சதாசிவ குடும்பிநீ என்றும் இதே அபிப்பிராயத்தை வெங்கடேஸ்வர அஷ்டோத்திரம் முதலியவைகளில் சொல்லப்பட்டிருக்கிறது இந்த உத்க்ருஷ்டமான ஸாம வேதத்தை ஸுஸ்வரமாய் கானம் செய்பவர்களுக்கு ஸங்கீத தேவதையின் அருளும் நாதோபஸகரான ஸ்ரீ தியாகப்ரம்மத்தின் அனுக்ரஹமும் பரிபூர்ண ஸௌக்கியங்களுமுண்டாகும்.

**A. வெங்கடஸுப்பிரமணிய சாஸ்திரி,**
"ஸ்ரீ தியாகராஜ நிலயம்", பழுங்காநத்தம்.

---

**1959ஹு டிசம்பர்மீ 17உ முதல் (விகாரிஹு மார்கழிமீ 2உ முதல்)**
**முக்கிய விசேஷங்கள்.**

| இங்கிலீஷ்மீ | | தமிழ்மீ | | |
|---|---|---|---|---|
| டிச. | 17 | விகாரி | | |
| | | மார்கழி | 2உ | மஹாருத்ரம் ஆரம்பம். |
| ,, | 20 | ,, | 5உ | வெள்ளிவிழா. |
| ,, | 23 | ,, | 8உ | அஷ்டமி பிரதக்ஷணம். |
| ,, | 29 | ,, | 14உ | அமாவாசை திதி. |
| 1960 ஜன. | 9 | ,, | 25உ | வைகுண்ட ஏகாதசி. |
| ,, | 13 | ,, | 29உ | ஆருத்ரா தரிசனம், போகிப் பண்டிகை. |

,, 14 தைமீ 1உ தைப்பொங்கல் மாலை 4 மணிக்கு பொங்கல்.

,, 15 ,, 2உ மாட்டுப் பொங்கல் கரி நாள்.

,, 27 ,, 14உ தை அமாவாசை, அமை. பிரமை திதித்வயம்.

பிப்ரவரி 14 ,, 30உ தைப்பூசம்

,, 25 மாசி 13உ மஹா சிவராத்திரி.

மார்ச்சு 13 ,, 30உ காரடையான் நோன்பு இரவு 10-30.

ஏப்ரல் 10 பங்குனி 28உ பங்குனி உத்திரம்.

,, 13 ஸார்வரி சித்திரை 1உ தமிழ் வருஷப்பிறப்பு.

,, 30 ,, 18உ சங்கர ஜயந்தி.

மே 10 ,, 28உ சித்திரா பௌர்ணமி (சித்திரை பூஜை முதல் நாள்.

ஜுலை 23 ஆடி 8உ ஆடி அமாவாசை.

ஆகஸ்ட் 6 ஆடி 22உ யஜுர் உபாகர்மா.

,, 7 ,, 23உ ருக் உபாகர்மா, காயத்ரீ ஜபம்.

,, 26 ஆவணி 11உ விநாயகசதுர்த்தி, சாமோபாகர்மா.

,, 27 ,, 12உ ரிஷிபஞ்சமி.

செப்டம் 20 புரட்டாசி 5உ மஹாளய அமாவாசை

,, 29 ,, 14உ ஆயுத பூஜை.

,, 30 ,, 15உ விஜயதசமி.

அக்டோ 18 ஐப்பசி 2உ தீபாவளி ஸ்நானம்.

,, 19 ,, 3உ அமாவாசை பண்டிகை.

டிசம்பர் 2 கார்த்தி 17உ திருக்கார்த்திகை.

,, 17 மார்கழி 3உ அமாவாசை (வருஷோத்ஸவம்)

சுபம்.

உ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:





முன்னை வினையகல மூங்கிற் குடியமுதன்
பொன்னங் கழற்கமலப் போதிரண்டும் என்னுடைய
சென்னிக் கணியாகச் சேர்த்தினேன் தென்புலத்தார்க்
கென்னுக் கடவுடையேன் யான்.

कमप्याद्यं गुरुं वन्दे कमला गृहमेधिनम्
प्रवक्ताचन्दसां वक्ता पञ्चरात्रस्य यः स्वयम
सह धर्मचरीं शौरेः संमन्त्रित जगद्धिताम्
अनुग्रहमयीं वन्दे नित्यमज्ञातनिग्रहाम्

ஸ்ரீமதே ராமானுஜாய நம:

# ராமானுஜ சரிதம்

ஸ்ரீ ராமானுஜர், கி. பி. 12-ம் நூற்றாண்டில் சென்னைக்கு அடுத்து 26 மைல் தூரத்தில் உள்ள ஸ்ரீ பெரும்புதூரில் அந்தணகுலத்தில் தோன்றி கலைகளனைத்தும் கற்று இளமையிலேயே விஷ்ணுபக்தி கொண்டு திகழ்ந்து வந்து குடும்பஸ்தருகி இல்லறம் நடாத்தி வந்தார் சிறிதுகாலம் சென்று அதில் விறக்தி கொண்டு துறவம் பூண்டு பல மாஹான்களை அண்டி பண்படைந்து காஞ்சிமாநகரம் சென்று யாதவப்பிரகாச ரென்பவரிடம் பல கலையும் படித்தார் அதிலும் விஷ்ணு சாயுஜ்யம் கிட்டாதெனக் கண்டு ஆழ்வாராதிகளின் திவ்யப் பிரபந்தங்களைக் கற்று தேர்ச்சியுற்று ஸ்ரீ ரெங்கம் சென்று திருகோஷ்டியூர் நம்பி என்பரிடம் திருமந்திர உபதேசம் பெற்று நம் நாடெங்கும் சுற்றி வந்தார். இவரின் முக்ய உபதேசம் விசிஷ்டாத்வைதம். இவருக்கும் சங்கரருக்கும் உபதேசமதத்தில் போதனை களில் அதிக வேறுபாடில்லை, கடவுளும் ஜீவனும் ஒன்றே. ஆனல் ஜீவன் கடவுளிடமிருந்து வேறுபட்டு மறுபடியும் ஒன்றுபடும் நிலையில் உள்ளது என்பதே விசிஷ்டாத்வைதத்தின் முக்கிய வித்யாஸ அம்சம், இவரும் வடமொழியில் பல நூல்கள் இயற்றியும் பிரம்ம சூத்திரத்திற்கு பாஷ்யம் எழுதியும் கடவுள் முன்நிலையில் யாவரும் சமம் யாருனலும் பக்தி ஒழுக்கம் இவை களினல் இறைவன் அருளைப் பெறலாம் என்று உபதேசித்துத் தக்க சான்றுகளுடன் நிரூபித்துப் பல நாஸ்திகர்களை பக்திமார்க்கத்திலிழுத்து ஸ்ரீ வைஷ்ணவ மதத்தை விருத்தி செய்து சிறந்த தொண்டாற்றினர். இவரது மதம் நமது நாடெங்கிலும் பரவியது. இவரது மதத்தை போதிக்கும் மடங்கள், நெல்லை ஜில்லாவிலுள்ள வானமாமலை என்னும் நாங்குநேரயிலும்

அஹோபிலத்திலும் இன்றும் இருந்து அதன் • ஜீயர் (சுவாமிகள்) தெய்வநெறியை உபதேசித்து வருகிறார் கள். இவரும் வேதசாரமான திவ்யப்பிரபந்தங்களையும் வைதிகமார்க்கத்தையும் பின்பற்றவே மக்களுக்கு உபதேசிக்கிறபடியால் இது விஷயங்களில் ஈடுபட்டுத் தொண்டாற்றிவரும் இந்த வைதிகஸமாஜம் நெடுங் காலம் பணியாற்றிவர எல்லா விப்ரர்களும் தங்களா லியன்ற உதவி செய்து காப்பதுடன் ஷை மார்க்கத்தை நம்பியே வாழும் வைதிகர்களையும் நம் குடும்பஸ்த்தர் போலவே பாவித்து எல்லா உபகாரமும் செய்யும் படியும் கேட்டுக்கொள்கிறேன். சுபம்.

கொ. சு.

---

ஸ்ரீ பரமகுருவே நம:

# ஸ்ரீ சங்கரர் சரிதம்.

குருர் பிர்மா: குருர் விஷ்ணு: குருர் தேவோ மஹேஸ்வர: குருஸ்ஸாக்ஷாத் பரம் பிர்மா தஸ்மை ஸ்ரீ குருவே நம:

ஆஸ்திக அன்பர்களே சுமார் 2000 வருஷங்களுக்கு முன் பல துர்மதங்கள் உண்டாகி வேததர்மமார்கத் துக்குக் களங்கம் தோன்ற ஆரம்பிக்கையில் இந்திராதி தேவர்கள் ஈஸ்வரனைப் பிரார்த்திக்க பரமன் அருளிய படி கேரள ராஜ்யக் காலடி க்ஷேத்திரத்தில் சிவகுரு ஆர்யாம்பிகைக்கு மகனாய் ஸ்ரீ சங்கரர் அவதரித்தார் பால்யப்பருவத்தில் எல்லா வித்தைகளும் கற்று பிக்ஷா டன காலத்தில் தன் பசிக்கு நெல்லிக்கனியை உள்ளன்புடன் இட்ட ஏழை அம்மைக்கு வீடு நிறைத் தங்கக் கனிகள் நிறைய அருளி தாயின் அனுமதியின் பேரில் சன்யாஸம் கொண்டு தேசசஞ்சாரம் செய்து சத்குரு கோவிந்த யோகீந்திரருடைய சீடராகி உபநிஷத்

போன்ற ஸகல ரகஸ்யங்களையும் கற்று தன் மந்திர பலத்தால் அகாத வெள்ளத்தை தடுத்துப் பின் காசி க்ஷேத்திரம் சென்று சண்டாள உருவில் வந்த பரமனை மனீஷாபஞ்சக ஸ்தோத்திரத்தால் நேரில் தரிசித்து சிஷ்யர்களுடன், பட்டபாதருக்கு நற்கதியருளி ஷையார் சொன்ன பிரகாரம் மாஹிஷ்மதிநகர் சென்று ஸ்வத: பிரமாணம் என்று கோஷித்த கிளியின் இருப்பிடமே, மண்டனமிஸ்ரர் கிரஹம் என்று அங்கு சென்று அக் கிரஹத்தில், வியாஸரையும் ஜெமினியையும் வைத்து நடக்கும் சிரார்த்தத்தில் ஆகாய மார்க்கமாக உள்ளே இறங்கி விஷ்ணு வரணத்தில் இருக்கச்சொன்ன மிச்ர ரிடம் அதை மறுத்து வாதபிக்ஷை கேட்டு அதில் வென்று உபய பாரதியான ஸரஸ்வதியின் கேள்விக்காக காம சாஸ்திரங்களைப் பயிலுவதற்காக ராஜா அமருகன் ஜட சரீரத்தில் பரகாயப்பிரவேசம் செய்து அதிலும் தேர்ச்சியடைந்து ரமித்துக்கொண்டு அந்த ஸகவாசத் தால் தனது நிலையை மறந்து இருந்த சமயம் குருவின் சரீரத்திற்கு ராஜஸ்திரீயின் ஆக்ஞைப்படி கேடு விளை யுங்கால் ஆசார்ய உடலைக் காத்த சீடர்கள் பாட்டு ரூபத்தில் ஆபத்தை அறிவித்தவுடன் அக்கினியில் இடப்பட்ட தன் உடலில் பிரவேசித்தார். பாதி வெந்த உடலினின்று ஸ்ரீ லக்ஷ்மிநரசிம்மனை ஸ்தோத்திரம் செய்து சுயரூபம் பெற்று ஸரஸ்வதியிடம் வரவே அம்பாள் தான் தோற்றதை ஒப்புக்கொண்டாள். அதன் பின் சீடர்கள் புடைசூழ தேச சஞ்சாரம் செய்யும்போது மூர்க்கனை கபாலிகனால் செய்யப்பட்ட சூழ்ச்சியி லிருந்து பத்மபாதர் மூலம் ந்ருசிம்ம ஸ்தோத்திரத்தால் விடுபட்டு கோகர்ணம் சென்று ஹரிஹரன் ஒன்றே என்று ஸ்தாபித்து மூகாம்பாள் ஆலயம் சென்று அங்கு இறந்த குழந்தையை தேவி ஸ்தோத்திரத்தால் பிழைக் கச்செய்து ஸ்ரீபலிபுரம் சென்று பிரபாகரரின் ஊமைக் குழந்தையை பேசச்செய்து ஹஸ்த்தாமலகர் என்று

பெயரிட்டுத் தனக்கு சிஷ்யனுக்கி ஸ்ரீ சிருங்கிரி சென்று சாரதா ஆலயம் கட்டிப் பிரதிஷ்டை செய்து இருக்குங்கால் தன் தாய்க்கு அந்திமகாலமான்தறிந்து வந்து அன்னைக்கு தேக ஸம்ஸ்காரத்துக்கு பந்துக்கள் ஒத்துவருதுபோக தன் தாயின் உள்ளங்கையிலிருந்து நெருப்பெடுத்து தகனம் செய்து இன்றுமுதல் வேதம் ஒத் நீங்கள் சக்தியற்றுப்போய் வீட்டிலேயே சுடுகாடு உடையவர்களாகவும் போவீர்கள் என்றும் பந்துக்களை சபித்து பல்லாயிரக்கணக்கான சிஷ்யர்கள் புடைசூழ ஸ்ரீ சங்கர குருநாதர் திக்விஜயம் செய்து ராமேஸ்வரம் சென்று சாக்த்தர்களை ஜயித்து காஞ்சிமாநகர் சென்று தேவி ஆலயப்பிரதிஷ்டை செய்து பின் பல தேசங்கள் சென்று மஹா துஷ்டர்களான கபாலிகர்கள் ஆயுதம். தாங்கி சிஷ்யர்களை அழிக்கக்கண்ட ஆசார்யாள் கோபாக்கினியால் அவர்களை அழித்து அவர்கள் அரசனை இருகசனுல் ஏவப்பட்ட பூதத்தையும் அழியச் செய்து நீலகண்ட சிவாசாரியாரை வென்று சீடருக்கி சௌராஷ்டிரம்முதலிய தேசங்கள் சென்று ஆங்காங்குள்ள நாஸ்திகர்களை வென்று காஷ்மீரம் சென்று ஸர்வக்ஞபீடமேர அங்கு வாதித்த அனைவரையும் ஆச்சர்யப்படும்படி வென்று அப்பீடமேறிப் பின் பலமடங்களை ஸ்தாபித்து சுரேஸ்வரர் முதலியவர்களை அங்கிருந்து ஆஸ்திகத்தை காக்கச்செய்து பத்ரிகாஸ்ரமம் சென்று ஸகல நாஸ்திக மதத்தையும் கண்டித்து அத்வைத மதத்தைநிலைநாட்டினூர். அவைதிகம் ஒழிந்தது. காபாலிகாதி ஆறு மதங்களையும் சீர்திருத்தம் செய்து ஷண்மதஸ்தாபனம் செய்து தனது முப்பத்திஇரண்டாவது வயதில்தேவர்கள் வேண்டுகோள்ப்படி கைலாஸம் சென்றூர். ஸ்ரீ ஆசார்யாளால் இப்படி அரும்பாடுபட்டு காக்கப்பட்ட வைதிகம்தம் அழிய நாம் விடாமல் பாதுகாக்க வேண்டியவர்களான்படியால் நண்பர்களே அந்த வேதமார்க்கம் புனருத்தாரணமாகவும் அதையே ஜீவன

